# தனித்தபோது நினைத்தவை

[**தொண்டன்**]

இன்றைய உலகப் போக்கை உற்று நோக்குவோம். வேகம். மிக மிக வேகம். எண்ணம், செய்ல் இன்ன பல வேகங்களினிடையே யுத்த வேகம் வீறிட்டெழுகின்றதைப் பார்க்கின்றோம். உலக முன்னேற்றத்திற்காகப் பாடுபடுவோர் சிலர். அமைதியுள்ளம் சிதறி அஞ்சுவோர் பலர். ஒரே எண்ணம். எப்பொழுது விபரீதங்களினின்று விடுபடுவது. மீட்சிக் காலம் உண்டா? அன்றி இதுதான் இறுதிக் காலமோ?

*　　　　*　　　　*

உலகத்தில் இன்னல்கள் ஒழிதல் வேண்டும். போக்க வழி என்ன? வழி கூறுபவனும் செய்பவனும் யாவன்? மனிதனா : இல்லை. ஒரு சில இன்னல்கள் அவனால் போக்க முடியும். முற்றும் முடியுமோ? முடியும். யாரால்? நாடு செழுமையடைய, மக்கள் அறிவு, ஒழுக்கம் ஓங்க, அரும் பெருஞ் சக்தி நிறைந்த ஒப்பற்ற பரம்பொருளால். பரம் பொருள். இது என்ன? காட்சி அளவில் காணக்கூடாத ஒன்றைக் கூறுகின்றீர்களே என்கின்றனர் சிலர். இப்பொருளைப் பற்றிய ஆராய்ச்சி வேண்டாம். உலகு உய்ய வேண்டும். இதற்கு மூலகாரணப் பொருள் வேண்டும். இதனைச்சரித்திரங்கள் "உலகை உய்விக்கும் பெரியோர்" என்று பெயரிட்டு அழைக்கும். இத்தகையோர் அவ்வப்போது தோன்றி மக்களின் அஞ்ஞான இருளைப் போக்கி ஞானச்சுடர் விளக்கைக் கொளுத்துகின்றனர். செயற்கரிய செயல்களைப் புரிகின்றனர். இவர்களின் அடிச்சுவட்டைப் பின் பற்றுவோரும் இவர்தம் கருத்துக்களைப் பொன்னே போல் போற்றி யாவருக்கும் போதிக்கின்றனர். இச்செயலால் மக்கள் நல்லறிவு பெற்று நலனுறுகின்றனர். இத்தகையோருக்கு அருங்குணங்கள் அமைந்திருத்தல் இயல்பே. பின்பற்றுவோரும் பெற்றிருப்பர்'என்பதில் ஐயமில்லை. ஆக இத்தகைய பெரியோர், அவரைப் பின்பற்றுவோர், மக்கள் ஆகிய இம்முப்பகுதியும் செப்பமுடன் ஒன்றின் உலகம் உய்யும் என்பதில் ஐயம் என்னை?

*　　　　*　　　　*

மதம், சமயம் இன்ன பலவற்றை யுண்டாக்கியோர் பலர். நமக்கு வேண்டுவது இன்பம். எல்லையில்லா இன்பம். இதனை நல்கியோரை நாம் “பெரியார்" , 'அடிகள்” என்கின்றோம். இது மட்டுமோ? கடவுள்" என்று கழறுவதிலும் துணிகின்றோம். போற்றுகின்றோம். அறிவு ஈயும் அருந்தகையோரும், அறிவு பெறும் சமுதாயக் கூட்டமும் இன்றேல் ஒன்றும் நடைபெறாது. இங்ஙனம் பல்வேறு இடங்களில் பல்வேறு தோற்றங்களில் இவர்கள் தோன்றக் குறைபாடு ஒழிந்து குணம் எழுகின்றது. சரித்திரமும் இவர்தம் வரலாறுகளை ஒருவாறு ஓதுவதை உணர்வோம். இவர்களைப் “பெரியார்' என்றழைக்கும் திருக்குறள். அறிவும் செயலும்

ஒன்றுபட்டவரே இத்தகையோர் என்று அடை மொழியுந் தந்து அழகு செய்கின்றது. திருமூலர், பெரியார் பெருமையைக் கூறுமிடத்து, "பெரியாருடன் கூடல் பேரின்பமாமே" என்றோதுகின்றனர். பெரியார் பெருமையைப் பேசவும் ஒண்ணுமோ?

* * *

இவர்கள் மாட்டு நம்பிக்கை வேண்டும். நம் உள்ளத்தில் உறுதிபெற்று வளரும் ஐயம் என்னும் வேரை நம்பிக்கைஎன்றும் மண் வெட்டியால் கல்வி எறிதல் வேண்டும். நம்ரபிக்கை காரணமாகவே அக்காலத்து அமைதி வாழ்வு நடாத்தினர் நம் முன்னோர். உலகில் தற்போது பல குறைகள் எற்பட்டுள்ளன. கூடியவரை அவற்றினின்றும் ஒவ்வொரு வரும் விடுதலை அடைய முனைதல் வேண்டும். நம் அறிவென்னும் செடியைக் கல்வி என்றும் நீர் பாய்ச்சி வளர்த்தல் வணடும். நம்மை நாமே உயர்த்திக்கொள்ள உதவுவன நம்முடைய அறிவும் செயலுமே.

* * *

உலகம் தான் போகின்ற போக்கில் போகின்றது. நாமும் அதனோடேயே போய்விடுவோம் என்று நினைத்தல் கூடாது. நாம் யார் என்பதை அறிந்து கொள்ளுதல் தான் நாம் பிறந்ததின் பயன் வாழ்க்கையின் பயன் ஆகும். உள்ளத்திலே நல்லேண்ணங்களை வளர்த்தல் இன்றியமையாததாகும். தன்னயறிந்து இன்புறல் வேண்டும் தன்னை படைத்த பொருளின் உண்மை நிலையை உணர்தல்வேண்டும்.

* * *

நாகரீக சின்னங்கள், விஞ்ஞான வளர்ச்சி குன்றி இருந்த அக்காத்தில் எத்துக்க அழகாக, அன்பாக வாழ்க்கை சீர் பெற நடந்தது. அது இதுபோது எங்குப் போயிற்று? உலக வேகத்தோடு வாழ்க்கை வேகம் சேர்ந்ததும் அரிய பெரிய கருத்துக்கள் மறைகின்றன. ஒரு முடிவு வருவதற்கில்லை.

எனவே செயலை அமைதியுடன் ஒழுக்காக நினைத்துச் செய்தல் வேண்டும். கடவுள் நம்பிக்கை கொண்டு, காரியத்தில் வெற்றிபெற்று மன்னுயிருக்கு நம்மால் இயன்றவரை நலம் செய்வோம். இது வொன்றே நாம் செய்ய வேண்டிய சிறந்த தொண்டு.

சித்தாந்தம் - 1943 ஹு - மார்ச்சு மீ